# பகவத் பாதை




## Bagavath Path

இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு

பாதை - 1 | 2012 / ஜனவரி | மலர் - 4

தனிச்சுற்றுக்கு மட்டும்




Sri Bagavath

அகத்தைப் பொறுத்தவரையில், நமக்கு ஏற்படும் உணர்வுகள் அனைத்தும் ஏற்பட்டு மறையும் நிலையிலேயே நம்மால் அடையாளம் கண்டு உணரப்படுகின்றன. அவற்றை நாம் சீரமைக்க முடியவே முடியாது.

– ஸ்ரீபகவத்



# ஆசை

- ஸ்ரீ பகவத்

ஆசை என்பது வினோதமான அம்சம் உடையது. "ஆசை என்றால் என்ன என்று தெரியுமா?" என நாம் எவரைக் கேட்டாலும், தெரியும் என்றுதான் கூறுவார்கள். ஆசை என்றால் என்ன என்பது எனக்குத் தெரியாது என எவரும் கூறமாட்டார்கள்.

உண்மையில் ஆசை என்றால் என்ன என்பது நமக்குத் தெரியாமலிருக்கும் காரணத்தினாலேயே ஆசை என்பது நமக்கு ஒரு புதிராகவும், பிரச்சனையாகவும் உள்ளது.

வேடிக்கையாக ஒரு கதையைக் கூறுவார்கள்.

வருசத்தின் கடைசி நாள் இரவில் அப்படி ஒரு நிகழ்ச்சி நடந்தது. வானத்திலிருந்து ஓர் அறிவிப்பு கேட்டது. "இறைவனின் பக்தர்களே! இறைவன் உங்களுக்குப் புத்தாண்டுப் பரிசு வழங்க விரும்புகிறார். நீங்கள் விரும்பும் பொருட்கள் உங்களுக்குப் பரிசாகக் கொடுக்கப்படும். நீங்கள் செய்ய வேண்டுவது ஒன்றே ஒன்றுதான். இன்று இரவு 12 மணிக்கு முன்னால் நீங்கள் ஒரு சீட்டில் உங்களுக்கு வேண்டிய பரிசுப் பொருட்களை பட்டியல் எழுதி நீங்கள் பிரார்த்தனை செய்யும் இடத்தில் வைத்துவிடவேண்டும். இரவு விடிவதற்குள் உங்களுக்கு வேண்டிய பரிசுப்பொருட்கள் உங்களுக்கு வந்து சேரும்".

இந்த அறிவிப்பை சிலர் நம்பினார்கள். பலர் நம்பவில்லை. ஆனாலும் தங்களுக்கு என்னென்ன பொருட்கள் தேவை என்று பட்டியலிட்டு, அதை ஒரு சீட்டில் எழுதி வைத்துவிட்டுப் படுத்துவிட்டார்கள்.

ஆனால் என்ன ஆச்சரியம், அவர்கள் கேட்டதெல்லாம் விடிவதற்குள் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருந்தன!

கார், பங்களா, வசதிகளை மேம்படுத்தும் பொருட்கள் என அவர்கள் கேட்டதெல்லாம் கிடைத்துவிட்டன. அத்தனைபேரும் மகிழ்ச்சியில் திளைத்தார்கள்.

ஆனால் இந்த மகிழ்ச்சி எத்தனை நாட்களுக்கு நீடித்தது? வெகுசீக்கிரத்தில் அவர்களை விட்டுப் போய்விட்டது. "பக்கத்து வீட்டுக்காரர் அதைக் கேட்டு வாங்கியிருக்கிறாரே, நாம் அதை வாங்காமல் விட்டுவிட்டோமே" இப்படிச் சிந்திக்க ஆரம்பித்து விட்டார்கள்.

சிலர் வாழ்க்கையில் எதையாவது சாதிக்கவேண்டும் என்ற லட்சியத்துடன் முயற்சி செய்வார்கள். உதாரணத்துக்கு ஒருவரை எடுத்துக்கொள்வோம். அவர் மருத்துவராக விரும்புகிறார். மருத்துவத் துறையில் சாதனை புரிந்து நோயாளிகளுக்குப் புதுவாழ்வைக் கொடுக்கவேண்டுமென்று விரும்புகிறார். கஷ்டப்பட்டுப் படித்து டாக்டராகவே ஆகிவிடுகிறார். அவர் கண்ட கனவு நனவாகி விடுகிறது. சோம்பல் இல்லாத உற்சாகத்துடன் நோயாளிகளுக்காகப் பணியாற்றுகிறார். அவருடைய செயல் அவருக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கிறது.

நாட்கள் ஆக ஆக நோயாளிகளைப் பார்ப்பதில் உள்ள மகிழ்ச்சியும், ஆர்வமும் சிறிது சிறிதாகக் குறைகிறது. இன்னும் ஒரு காலகட்டத்தில் நோயாளிகளைப் பார்க்காமல் விடுமுறையிலிருப்பது மகிழ்ச்சியாக இருக்கிறது.

இவையெல்லாம் ஏன் இப்படி நிகழ்கின்றன? நமக்குள் இங்கு என்னதான் நடக்கிறது?

மகிழ்ச்சியை ஏற்படுத்திய பொருட்கள் ஏன் மகிழ்ச்சியை வழங்குவதை நிறுத்திவிடுகின்றன? மகிழ்ச்சியாக ஆரம்பித்த நமது தொழில் பிறகு ஏன் தொந்தரவாக மாறிவிட்டது?

முதலாவது பார்த்த உதாரணத்தையே சற்று வேறு விதமாகப் பார்ப்போம். காரும், பங்களாவும் நமக்கு மகிழ்ச்சியைத் தரும் என நம்பி நாம் அவற்றை விரும்புகின்றோம். நாம் விரும்பியபடியே காரும், பங்களாவும் நமக்குக் கிடைத்து விடுவதாக வைத்துக் கொள்வோம்.

ஆனால் அந்தக் காரும், பங்களாவும் நாம் விரும்பியபடி நமக்கு மகிழ்ச்சியைக் கொடுப்பதற்குப் பதிலாக பயத்தையும், மனத்துயரத்தையும் கொடுப்பதாக வைத்துக் கொள்வோம். இப்போது நாம் அந்தக் காரையும், பங்களாவையும் விரும்புவோமா? நிச்சயமாக விரும்பமாட்டோம்.

உண்மையில் நாம் காரையோ பங்களாவையோ விரும்பவில்லை. நமது மன மகிழ்ச்சியையே விரும்புகின்றோம். நமது மன உணர்வையே விரும்புகின்றோம். நாம் காரையோ, பங்களாவையோ வெறுப்பதில்லை. மனத்துயரத்தையே வெறுக்கிறோம். மன உணர்வையே வெறுக்கிறோம்.

நாம் உண்மையில் விரும்புவது நமது மன உணர்வுகளையே. நாம் உண்மையில் வெறுப்பது நமது மன உணர்வுகளையே. புறப்பொருட்களும், வாழ்க்கை நிகழ்வுகளும் ஒரு தற்காலிகமான காரணமே. நாம் நமது மன உணர்வுகளை, புற நிகழ்வுகளோடும், பொருட்களோடும் பிணைத்துக் கொண்டுள்ளோம். அதனால் புறப்பொருளும், புற நிகழ்வுகளும் நம்முடைய மன உணர்வுகளுக்குக் காரணமென்று நாம் தவறாக முடிவெடுத்துவிடுகிறோம்.

இதனால் நாம் புறத்தைச் சீரமைக்கப் போராடுகின்றோம். உண்மையில் நாம் புறத்தைச் சீரமைக்கும் எண்ணத்துடன் அகத்தினுள்ளே தான் போராடுகின்றோம்.

ஞானி ஒருவர் தெருவில் எதையோ தேடிக்கொண்டிருந்தார். அது மாலை மங்கி, இருள் சூழத் துவங்கும் நேரம். தெருவில் போவோர் அவருக்கு உதவி செய்ய முன்வந்தார்கள். "சுவாமி! என்ன தேடுகிறீர்கள்? இருள் சூழப்போகிறது. வெளிச்சம் இருக்கும்போதே நாங்களும் சேர்ந்து தேடித்தந்துவிடுகிறோம். எதைத் தொலைத்துவிட்டீர்கள்?" அவர்கள் அந்த ஞானியிடம் கேட்டார்கள்.

அந்த ஞானி அமைதியாகக் கூறினார். "துணி தைத்துக்கொண்டிருந்தேன். தையல் ஊசி கீழே விழுந்து தொலைந்து விட்டது".

"எங்கே உட்கார்ந்து துணி தைத்தீர்கள்? எந்த இடத்தில் ஊசி விழுந்தது?"

"வீட்டுக்குள் உட்கார்ந்துதான் துணி தைத்துக்கொண்டிருந்தேன். அங்குதான் விழுந்துவிட்டது".

"வீட்டுக்குள் விழுந்த ஊசியைத் தெருவில் தேடினால் கிடைக்குமா சுவாமி?"

"வீட்டுக்குள் இருட்டாக இருக்கிறது. இருட்டுக்குள் எப்படித் தேடமுடியும்? தெருவில் வெளிச்சம் இருக்கிறது. வெளிச்சத்தில் தானே தேடமுடியும்?"

"ஏன் சுவாமி இப்படிச் சொல்கிறீர்கள்?"

"உங்களைப் பின்பற்றித்தான் நானும் இப்படி முயற்சி செய்கிறேன். அகத்திலுள்ள பிரச்சினைக்குப் புறத்தில் தீர்வு கண்டால் போதும் என்று நீங்கள் முயற்சி செய்யவில்லையா? அதைப் பார்த்துத்தான் நானும் இப்படித் தேடுகிறேன்!"

உண்மையில் நாம் காருக்கும், பங்களாவுக்கும் ஆசைப்படவில்லை. மனமகிழ்ச்சிக்குத்தான் ஆசைப்படுகிறோம்.

நம் மன மகிழ்ச்சியும், மனத்துயரமும், மன உணர்வுகளே.

நமது மன உணர்வுகளுக்கு, புறப்பொருட்களும், புறத்திலுள்ள நிகழ்வுகளும் தான் காரணம் என நினைத்து புறப்பொருளை விரும்புகிறோம். நமது மன உணர்வுகளுக்கு, புறப் பொருளும், புற நிகழ்வுகளுந்தான் காரணமா?

ஓர் உதாரணத்தை எடுத்துக்கொள்வோம். நாம் இருவரும் பொருளாதாரத்தில் சமமான அந்தஸ்து உள்ளவர்கள் என வைத்துக் கொள்வோம். நம் இருவரது வருவாயும், நம் இருவரது செலவும் ஒரே அளவாக உள்ளது.

நாம் இருவரும் வெளியூருக்குப் பயணம் செய்கிறோம். பயணத்தின்போது நாம் எடுத்துவந்த மொத்தப்பணமும் திருடு போய்விடுகின்றது. நீங்கள் எடுத்துவந்த பத்தாயிரம் ரூபாயும், நான் எடுத்துவந்த பத்தாயிரம் ரூபாயும் திருடு போய்விடுகின்றது. இதனால் நம் இருவருக்கும் மன வருத்தம் ஏற்படுகிறது.

உங்களுக்கு ஏற்பட்ட மன வருத்தமும், எனக்கு ஏற்பட்ட மன வருத்தமும் ஒரே அளவானதாகத் தான் இருக்குமா?

நிச்சயம் ஒரே தன்மையில் இருக்காது. நான் மிகவும் மனம் உடைந்து போய்விடலாம். நீங்கள் அந்த இழப்பை சாதாரணமாக எடுத்துக்கொள்ளலாம்.

இதற்குக் காரணம் நமது மன இயல்புகளே ஆகும்.

அவரவர் இயல்புக்கேற்ற மன அனுபவங்களே அவரவருக்கு ஏற்படுகின்றன. நமது மன உணர்வுகள் அனைத்துக்கும் காரணம் நமது மன இயல்புகளே.

நமது உணர்வுகளுக்குக் காரணம் நமது மன இயல்பாக இருந்தாலும், அது உணர்வாக வெளிப்படும் போதுதான் அது ஒரு பிரச்சினைக்குரிய அம்சமாகவோ அல்லது விரும்பக்கூடிய அம்சமாகவோ அமைந்து விடுகின்றது.

மகிழ்ச்சியான உணர்வாக வெளிப்படும்போது அதனை நாம் விரும்புகின்றோம். துக்க உணர்வாக வெளிப்படும் போது அதை நாம் வெறுக்கின்றோம்.

நமது இன்பதுன்ப உணர்வுகளுக்குப் புறப்பொருள் காரணமல்ல, அகமே தான் காரணம் என்பதை நாம் புரிந்து கொள்வோமானால், நமக்கு வேண்டிய தீர்வுகளையும் நமக்குள்ளேயே அடைந்திடமுடியும்.

நமக்குத் தேவையான தீர்வு நமக்கு வெளியே புறப்பொருளிலும், புற நிகழ்வுகளிலுந்தான் உள்ளது என்று எண்ணும் வரையில்,

நமது பிரச்சினைகள் தீர்வு பெறுவதற்குச் சாத்தியமே இல்லை.

ஏனெனில், புறப்பொருளும், புற நிகழ்வுகளும் நமது கட்டுப்பாட்டில் இல்லை. அங்கு பல நபர்களுடைய ஆதிக்கம் உள்ளது. ஆகவே அவற்றைக் கட்டுப்படுத்தி, நாம் நமக்குத் தேவையான தீர்வுகளைக் கொண்டு வரமுடியாது.

ஆனால் நமது அகத்தைப் பொறுத்த அளவில் பிறருடைய ஆதிக்கம் என்பது நேரடியாகச் சாத்தியப்படாத ஒன்று. ஆகவே புறமனிதர்களும், நிகழ்வுகளும், நமது மன உணர்வுகளுடன் நேரடியாகக் குறுக்கிடமுடியாது.

நமது மன உணர்வுகளும், நமது மன இயல்புகளும், நம்மோடு மட்டுமே நேரடித் தொடர்புடன் உள்ளது. ஆகவே நமது உணர்வுகளுக்குத் தீர்வு காணும் முதல் உரிமை நமக்கு மட்டுமே உள்ளது.

நாம் நமது மன உணர்வுகளுக்குத் தீர்வு கண்டுவிட்டோமென்றால், புறப்பிரச்சினைகள் அனைத்தும் வெறும் புஸ்வானமாகி விடும். சாரமற்ற சக்கையாகிவிடும். அந்நிலையில் புறப் பொருளையும், புறநிகழ்வுகளையும் நிர்வகிப்பது என்பது மிகவும் சுலபமாகிவிடும்.

நீங்கள் கோடிகோடியாகப் பொருளீட்டும் பெருஞ்செல்வந்தராக இருக்கலாம். நீங்கள் ஒரு அரசாங்கத்தையோ அல்லது ஒரு பெரிய நிறுவனத்தையோ நிர்வகிக்கும் உயர் அதிகாரியாகவோ அல்லது நிர்வாகியாகவோ இருக்கலாம்.

உங்கள் உடைமைகளோ, உங்களது கடமைகளோ, உங்களுக்குச் சுமை கிடையாது. அவற்றைத் துறக்கவோ, கீழே இறக்கி வைக்கவோ தேவையில்லை. ஏனெனில், அவை உங்களுடைய சுமையோ பிரச்சினையோ கிடையாது.

இதை எழுதிக் கொண்டிருக்கும்போதே அன்பர் ஒருவர் தொடர்புகொண்டு கேட்டார். "நான் வாழ்க்கையில் மிகவும் அடிபட்டு நொறுங்கிப் போய்விட்டேன். நிம்மதியான வாழ்க்கை முறையை அமைத்துக் கொள்ள விரும்புகின்றேன். நான் எனது பணிகளை எப்படி மாற்றியமைத்துக் கொள்வது?" என ஆலோசனை கேட்டார்.

வீட்டுக்குள் தொலைத்துவிட்ட ஊசியைத் தெருவில் தேடிய கதைதான், நமது வாழ்க்கைப் பணிகளை மாற்றிக்கொள்வது.

ஆன்மீகம் என்ற பெயரில் பலர் தங்களது உடைமைகளையும், கடமைகளையும் துறந்து விடுகின்றனர்.

நமக்கு வழிகாட்டும் பலர் துறவிகளாக இருப்பதால், நாமும் அப்படி ஒரு முடிவுக்கு வந்து துறவறத்தின் மீது அக்கறை கொள்ள ஆரம்பித்து விடுகிறோம்.

உண்மையில் நமது பிரச்சினைகளுக்கான அனைத்துத் தீர்வுகளும், அகத்தில் தான் உள்ளனவே தவிர புறத்தில் கிடையாது.

அக உணர்வுகளைத் தீர்வு செய்வது அவ்வளவு முக்கியமானதா? அக உணர்வுகளைத் தீர்வு செய்வது அவ்வளவு பிரம்மாண்டமானதா?

அக உணர்வுகளுக்குத் தீர்வு காணவேண்டுவது முக்கியம் என்பது உண்மைதான். ஆனால் அது பிரம்மாண்டமான ஒன்று என்பதில் தான் சற்றுக் குழப்பம் உள்ளது. ஏனெனில் அதை பிரம்மாண்டம் என்றும் கூறலாம். சர்வசாதாரணமானது என்றும் கூறலாம். ஏன் அப்படி?

நாம் மிகவும் கடினமாக உழைத்துத்தான் நமது அக உணர்வுகளுக்குத் தீர்வுகாண வேண்டுமென்றால், அதை பிரம்மாண்டமான ஒன்றாகக் கருதலாம். ஆனால் அதற்குத் தீர்வு காணுவதற்கு நாம் எதனையுமே செய்யத்தேவையில்லை. அப்படி எதையுமே செய்யத்தேவையில்லை என்பதை நாம் புரிந்து கொண்டால் மட்டும் போதும். அவை தாமாகத் தீர்வடைந்துவிடும் என்பதைப் புரிந்துகொண்டால் அது சாதாரணமானதே.

நமது மன உணர்வுகளுக்குத் தீர்வு காண முயற்சி செய்வது என்பது, நமது மனதோடு போராடுவதே ஆகும்.

நமக்கு ஏற்படும் இன்பமான உணர்வைத் தக்க வைப்பதற்காகவும், நமக்கு ஏற்படும் துன்பமான உணர்வை அப்புறப்படுத்துவதற்காகவும் நாம் நமக்குள் போராடுவோமேயானால், அது நமது மனதே இரு பிரிவாகப் பிரிந்து கொண்டு, ஒரு பகுதி, இன்னுமொரு பகுதியைத் தனது கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரும் முயற்சியே ஆகும்.

ஒரு நாணயத்தின் ஒரு பக்கம், இன்னுமொரு பக்கத்தைத் தனது கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவர முயற்சித்தால், அது நடைபெறுவது சாத்தியமா?

உண்மையில் மனதைச் சீரமைக்க முயற்சிப்பது தான் உண்மையான பிரச்சினையே. அதை நம்மால் சீரமைக்க முடியாது என்ற உண்மையை நமது மனதே புரிந்து கொண்டு அமைதியடையும்போது, நமது மொத்த மனதும் நம்மால் புறக்கணிக்கப்படுகின்றது.

இதுதான் மனத்துறவு. நாம் நமது மனதைப் புறக்கணித்ததால், நமது மனது அப்படியே செயலற்று இயங்காமல் போய்விடுமென்று பொருளல்ல.

அதற்குப் பிறகும் அது இயங்குகிறது. ஆனால் அது தனக்குள் போராடாமல் இயங்குகிறது. அப்படிப் போராடாமல் இயங்கும்போது அதுவே விடுதலையுற்ற மனதாக மாறிவிடுகிறது.

போராடி வந்த மனது, போராடாத தன்மைக்கு மாறிவிடுகிறது. போராடிப் போராடி, தன்னைக் கடினப் படுத்திவந்த மனது, போராடாத தன்மையில், மென்மையாகவும், திரவ நிலையுடையதாகவும் மாறிவிடுகிறது.

இப்போது நமது மொத்த மனோ இயக்கமும் விடுதலையுற்றதாகவும், புத்தம் புதிய பிரவாகமாகவும் மாறிவிடுகிறது. ஆசையுடன் போராடிய மனது இப்போது அனைத்தையும் கருணையுடன் அரவணைத்துக் கொள்கிறது.

## பகவத் பாதையில் மலர்ந்த மலர்கள்

# வாழையடி வாழை

வாழையடி வாழை என்பதன் பொருளும், கருத்தும் இந்நாளில் அனைவரும் அறிந்த ஒன்றாகத் தான் இருக்கும். இருப்பினும் அதனை இன்னும் சிறப்பிக்கும் வகையில், அந்த வாழை போல் நம் அனைவருக்கும் பயன்படும் வகையில் வரப்ரசாதமாகவும் நம் அனைவரின் சொத்தாகவும், ஒப்பிலா மணி-யாகவும் நமது ஸ்ரீ பகவத் ஐயா திகழ்கிறார்கள். இவ்வாறு வர்ணிப்பதற்கும் காரணம் உண்டு, அவை பின்வருமாறு :

நாம் திண்டுக்கல்லில் உள்ள பிரபல புத்தகக் கடையில் நூல் வாங்கிப் படிப்பது வழக்கம். நமது தேடலின் போது அப்போது நம் கண்களில் எந்தப் புத்தகம் படிக்கலாம் என்று தோன்றுமோ அதை வாங்கிப் படிப்பது வழக்கம். அதுபோல் முழுக்க முழுக்க மிகவும் எதார்த்தமாகக் கண்ணில் பட்ட புத்தகம் தான் 'சூன்ய ப்ரவாகம்'. படித்து முடித்தோம். ஞான விடுதலை புத்தகம் வாங்க வேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. ஆனால் கிடைக்கவில்லை! கிடைத்தது! தியானத்தை விடு! ஞானத்தைப் பெறு!

அவ்வளவுதான்! எப்படி ஒருவன் பல நூறு மாடி கட்டிடத்தில் இருந்து கீழே விழுந்து விடுகின்ற நிகழ்வு ஏற்படும்போது, அந்தக் கடைசி வினாடியில் அவன் சட்டென்று தன் உறக்கத்தில் இருந்து விழிக்கின்றானோ, அப்படி ஒரு நிம்மதி. ஒரு நிம்மதிப் பெருமூச்சு. அப்பாடா! நல்ல வேளை, இது நிஜம் இல்லை, வெறும் கனவுதான் என்று தன்னை ஆறுதல் செய்து கொள்கிறானோ, அதுபோல் இப்போது அவனுடைய மனநிலை எவ்வாறு இருக்குமோ அதுதான்! அதுதான்! விழிக்கின்ற வரை கனவு என்று அறியப்படாத ஒன்று விழித்தபின் கணப்பொழுதில் மறையக்கூடிய ஒன்றுதான் என்று புரிந்தது. ஏற்கனவே இக்கருத்துக்களின் எண்ணம் மனதில் வந்து சென்றிருந்தாலும், இதுதான் அது என்று நம் எல்லோருக்கும் உணர்த்தியவர் ஐயா தான். புரிதலுக்குப் பிறகு நமது பார்வையில் இயேசு, நபி, புத்தர், ஓஷோ முதற்கொண்டு இன்னும் எத்தனை பெரியோர் மகான்கள் முதல் பகவத் ஐயா-வையும் இணைத்து நம்மால் யாரையும் பிரித்துப் பார்க்க முடியவில்லை.

எந்த ஒன்றை அறிந்தால் இந்தப் பிரபஞ்சம் அனைத்தையும் அறிந்தது ஆகுமோ அந்த ஒன்றை பகவத் ஐயா மூலம் அறிய முடிந்தது. நன்றி!

கனவுக் குழப்பத்தில் இருந்து விழிப்படைவீர்! பயனடைவீர்! சிறப்படைவீர்!

- அசோக் திண்டுக்கல்
Cell : 99428-25255

# ஆசிரியர் பகுதி

புத்தாண்டு நல்வாழ்த்துக்கள்! இந்தப் புத்தாண்டு, ஒரு புனிதமான ஆண்டாகக் கருதப்படுகிறது.

2012 என்பது, பலவிதமான எதிர்பார்ப்புக்களை உள்ளடக்கிப் பிறந்துள்ளது.

நம்முடைய மனது விடுதலையுற்ற மனதாகச் செயல்படும்போது, அது கள்ளங்கபடமற்ற குழந்தைத் தன்மையுடன் செயல்படும் மனதாகிவிடுகின்றது.

அகத்தளவில் குழந்தையாகவும், புறத்தளவில் அறிஞனாகவும் செயல்படுவது எவ்வாறு என்பதைக் காட்டும் பாதையாகவே, நமது பகவத்பாதை அமைந்துள்ளது.

அனைவரும் அகத்திலும் புறத்திலும் சுபிட்சமடையவேண்டும் என நம் பகவத்பாதை அனைவருக்கும் புத்தாண்டு நல்வாழ்த்துக்களைத் தெரிவிக்கின்றது.

அனைவரையும் புனிதமாக்கும் நமது பாதையின் பயணம் நம் அனைவர் ஆதரவுடனும் இனிதே தொடங்குவதாக!

செய்திகள் : கலைஞர் தொலைக்காட்சியில் 6-12-2011 காலை 8-00 மணிக்கு ரமேஷ் பிரபா நிகழ்த்திய "சந்தித்த வேளையில்" நிகழ்ச்சியில் அய்யா சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்டு கலந்துரையாடல் நிகழ்த்தினார்.

நல்வாழ்த்துக்களுடன்
ஆசிரியர் - A. செந்தில்நாதன், 99421 81933

### 24-12-2012 முதல் 25-2-2012 வரை
### திருவண்ணாமலையில் ஐயாவை சந்திக்கும் முகவரி

108/21, T.S.R. நகர், மணக்குள விநாயகர் தெருவின் நீட்டிப்பு, (யோகிராம் சுரத்குமார் ஆசிரமம் மற்றும் அரசு கலைக் கல்லூரி விடுதிக்குப் பின்புறம்), திருவண்ணாமலை-606603.
போன் : 9944215677.





# ?கேள்வி பதில்

**கேள்வி :** மனதில் நமக்கு எத்தனையோ உணர்வுகள் வருகின்றன, அவை யாவும் தாமாகவே போய்விடுமா?

**ஸ்ரீ பகவத் :** ஆமாம். தாமாகப் போய்விடும். நாம் ஏதாவது உணர்வை, நமது புறத் தேவைக்காக 'அடாப்ட்' செய்து கொள்ளலாம். தேவையில்லாதவற்றை அப்புறப்படுத்தத் தேவையில்லை. 'அடாப்ட்' செய்யாமல் விட்டுவிட்டால், அதுவாகவே மறைந்துவிடும். உணர்வுகளே வரக்கூடாது; எண்ணங்களே வரக்கூடாது என்று நம்மை உறை நிலைக்குக் கொண்டுபோய் விடக்கூடாது. கம்ப்யூட்டரை எடுத்துக்கொண்டால், ஓர் அம்புக் குறியானது சுதந்திரமாக அங்கும் இங்கும் நகர்ந்து கொண்டிருக்கும் தன்மையுடையதாக இருக்கும். நமக்கு தேவைப்படும் இடத்தில் அம்புக் குறியை நிறுத்தி, அதற்கு ஓ.கே. கொடுத்தால், அது சம்மந்தப்பட்ட தகவல்கள் வெளிப்பட ஆரம்பிக்கும். அம்புக்குறி எங்கேயும் போகமுடியாமல் ஒரே இடத்தில் நின்றுவிட்டது என்றால், அது செயல்படாமல் நின்று போய்விட்டது என்று அர்த்தம். அதுபோல் நமது உணர்வுகளும், நினைவுகளும் அதுபோக்கில் சுதந்திரமாக வந்து போய்க் கொண்டிருப்பதுதான் சரியானது. புறச் செயலுக்குத் தேவையான உணர்வுக்கும் நினைவுக்கும் மட்டும் நாம் ஓ.கே. கொடுத்து விடவேண்டும். அப்படி ஓ.கே. கொடுத்து "கிளிக்" செய்வது, நம் அக நிலையை சரிப்படுத்துவதற்காக இருக்கக் கூடாது.

புறச்செயல்களின் நிர்வாகத்திற்காக மட்டுமே அப்படி "கிளிக்" செய்துகொள்ளலாம். நாம் ஏதாவது ஒரு நிலையை நாடுவது என்பது இயக்கமற்ற - உறைந்த நிலையான - ஒரு நிலையைத் தேடுவதே ஆகும். எல்லாமும் அதுபோக்கில் வந்து கொண்டிருக்கும் நிலைதான் சரியான நிலை.

வெளிப்புற நடவடிக்கைக்காக மட்டுமே நாம் 'கிளிக்' செய்து 'அடாப்ட்' பண்ணிக்கொள்ளலாம். ஆனால் அகத்தைச் சரிபண்ணவும் கூட, நமது மனமே கோரிக்கை எழுப்பும். பயமில்லாத நிலை வேண்டும்; துக்கமில்லாத நிலைவேண்டும், ஆனந்தமான நிலை வேண்டும் என்று நமது மனதே, நமது மனதைச் சீரமைக்கும் வகையில் "கிளிக்" செய்யத் தூண்டும்.

ஆனால் அதற்கு நாம் 'கிளிக்' செய்து விடக்கூடாது.

## சூன்யப்பிரவாகம் நூல் ஆசிரியர் *இரா. ஆனந்தகுமார்*
## பார்வையில் பகவத் பாதை

அன்புள்ள ஆசிரியருக்கு,

சில காலம் முன்பு, ஒரு மாலை வேளையில் நண்பர் ஒருவர் அலைபேசியில் அழைத்தார்.

சூன்யப்ரவாகம் மிக நன்றாக இருந்ததாகவும், தனக்கு விஷயம் என்னவென்று நன்கு விளங்கிவிட்டதாகவும், பிரவாகம் என்று ஐயா எதைக் குறிப்பிடுகிறார் எனும் புரிதல் ஏற்பட்டுவிட்டதாகவும் கூறினார்.

மேலும், இவ்வளவு சுலபமான ஒன்றை இத்தனை காலம் எப்படித் தவறவிட்டேன்!? என் முந்தைய குருமார்கள் விளக்கியது தவறா? அல்லது நான் தவறாகப் புரிந்து கொண்டு விட்டேனா!? இந்தப் புரிதலை என்னால் இயன்றவரை தேடல் கொண்ட அன்பர்களுக்குக் கொண்டு செல்லவேண்டும். அதற்கு நான் என்ன செய்வது என்று நீண்ட நேரம் பேசிவிட்டு வைத்தார்.

இப்போதெல்லாம் இது போன்று யாராவது சொல்வதைக் கேட்டால் உள்ளிருந்து ஒரு பறவை வினோத ஒலியொன்றை எழுப்பி விழித்துப் பார்ப்பதுண்டு.

அதற்குப் பின் நீண்ட நாட்களாக அந்த நண்பரிடமிருந்து அழைப்பு இல்லை.

சமீபத்தில், ஒரு பதினைந்து நாட்களுக்கு முன் அந்த நண்பர் மீண்டும் அழைத்தார். தன்னை அடையாளம் தெரிகிறதா என்று கேட்டுவிட்டு,

"உங்களுக்கெல்லாம் அந்தப் புரிதல் அப்படியேதான் இருக்காய்யா..." என்று கேட்டார்.

கேள்வியின் தொனியிலேயே ஒருவித சோர்வும் லேசான கேலியும் உணர முடிந்தது.

நான் சொன்னேன்,

இல்லை ஐயா, அப்படியே நிலைத்திருக்க அங்கே ஒன்றும் இல்லை. "புரிதல்" என்பது ஒரு நிகழ்வல்ல, இதுவரை நடக்காத விஷயம் ஒன்று இப்போது எனக்கு நடந்துவிட்டது என்று நீங்கள் உணர்ந்தால் அது புரிதல் அல்ல.

அதைவிட மிக முக்கியமான சாரம் என்னவென்றால்,

"நான் நீச்சல் கற்றுக்கொண்டேன்", "நான் வயலின் வாசிக்கக் கற்றுக் கொண்டேன்", "நான் அந்தத் தொழில் நுணுக்கத்தைக் கற்றுக் கொண்டேன்" என்று கூறுவதைப் போல் "நான் புரிந்து கொண்டேன்" என்று சொல்ல இயலாது, புறத்தில் வார்த்தைப் பரிமாற்றத்திற்கு வேண்டுமானால் அவ்வாறு சொல்ல இயலலாம்.

ஆனால் நிதர்சனத்தில் அப்படி ஒரு உணர்வே இல்லை. அப்படி உணர்ந்தீர்களானால், அது வெறும் மூளையினால் தின்று செறிக்கப்பட்ட நினைவு எச்சமே. மனதின் நுண்மையான பல தந்திரங்களில் இதுவும் ஒன்று.

பிரவாகத்தில் அவ்வுணர்வும் வெகு விரைவில் அடித்துச் செல்லபட்டுவிடும்.

ஆயினும் அதையும் நிபந்தனையின்றி, ஒன்றும் செய்யாமல் ஏற்றுக் கொண்டீர்களானால் அதற்குப் பின் எனக்கு புரிந்துவிட்டது என்று உணரவோ, சொல்லவோ அவசியம் இராது.



31, இராமலிங்கசாமி தெரு, அம்மாபேட்டை, சேலம் - 636 003. தமிழ்நாடு, இந்தியா. தொடர்புக்கு : 97891 65555, 99942 05880.

எண்ணங்கள், உணர்வுகளைப் பிரவாகமாக ஓடிக் கொண்டிருப்பதைப் புரிந்து கொள்ளும் ஒரு சாதகன் இதை எல்லாம் பார்த்துக் கொண்டிருக்கும் "நான்" எண்ணத்திலிருந்து வேறுபட்ட சாட்சியுணர்வாக எப்போதும் உள்ளதாகவே தன்னையறியாமல் கருதிவிடுகிறான்.

ஆனால் மற்ற எண்ணங்களைப் போலவே என்னைப் பற்றி நான் கொண்டுள்ள உருவகங்களும் எண்ணமே,

ஸ்திரமற்ற ஓடி மறையும் எண்ணங்களைப் போலவே "நான்" உணர்வும், உருவகமும் ஸ்திரமற்றதே எனும் புரிதல் ஏற்படும்போது...

எனக்கு அது நடந்தது, எனக்கு இது நடந்தது, எனக்குப் புரிந்தது, நான் தெரிந்து கொண்டேன், என்னுடைய அனுபவம் என்பதெல்லாம் ஒரு அபத்தமாக மாறி மறைந்துவிடுகிறது.

இத்தன்னிழப்பை அறிந்து கொள்ளும்வரையில் புரிதலும் தற்காலிகமானதும், மேலோட்டமானதுமாகும்.

புரிதலும் வந்து போவதுமாகவே இருக்கும். போராட்டம் முற்றுப் பெற்றதைப் போல் தோன்றினாலும் "நான்" முடிச்சும் அவிழ்ந்து, கரைந்து போகாதவாறு அதை ஒரு அனுபவமாகவே கருதிக்கொண்டிருக்க இயலும் என்றேன்.

அவர் மேலும் கேட்டார், "உங்களின் அனுபவமும், சரி அந்த வார்த்தை வேண்டாம். உங்களின் புரிதலும், அய்யாவின் புரிதலும் ஒன்றுதானா? நீங்கள் அப்போது புரிந்துகொண்டதைப் போலவேதான் இப்போதும் இருக்கிறீர்களா?" என்றார். நான் கூறினேன்,

ஐயா என்னுள் "புரிதல்" என்னும் எந்த கட்டுமானத்தையும் ஏற்படுத்தவில்லை. மாறாக ஏற்கனவே இருந்ததை எல்லாம் இடித்துவிடவே உபகாரம் செய்தார். "இடித்துக் கொண்டிருப்பவனையும் சேர்த்து..."

நீங்கள் எண்ணுவது போல் இங்கே பாதுகாக்க, புதிதாக நிர்மாணிக்க, அழகுபடுத்த, செறிவூட்ட, ஸ்திரப் படுத்திக்கொள்ள ஒன்றுமேயில்லை.

எனவே நீங்கள் அப்படியேதான் இருக்கிறீர்களா எனும் கேள்வியில் எந்த அர்த்தமும் இனி இருக்கப்போவதில்லை.

"என் புரிதல் என்ன? என்று கேட்கிறீர்கள்.

இது வெறும் வார்த்தைகளின் தந்திரம். என்னுடைய அனுபவம் என்ன என்று கேட்பதே இதன் சூசகம்.

'என் புரிதல்', என் அனுபவம் இவையிரண்டிற்கும் எள்ளளவும் வித்தியாசம் கிடையாது.

"என்னுடைய புரிதல்" என்று ஒன்று இருக்கவே முடியாது!

அப்படி ஒரு உணர்வு உள்ளவரை அது புரிதலே இல்லை.

இது ஒரு சுய (self) அனுபவம் அல்லது வியக்தியின் (Personality) அனுபவம் அல்ல.

"நான்" எனும் உளவியல் கட்டமைப்பின் (Psychological Structure about me or I) மூலம் அதைப் புரிந்து கொள்ள முயலும்வரை அது நடப்பதில்லை. ஏனெனில் புரிந்து கொள்ள முயலும் அந்த கட்டமைப்பும் கணத்திற்கு கணம் தன்னை இழந்து கொண்டே இருக்கிறது என்றறிவதே புரிதல்.

அதன்பின் புரிதல் எனும் வார்த்தைக்குக் கூட எந்த மதிப்பும் இல்லை.

மற்றபடி பிரவாகத்தை உணர்கிறவனோ, அறிகிறவனோ, புரிந்து கொள்கிறவனோ, அனுபவிக்கிறவனோ யாருமில்லை. அதற்கொரு தனித்த பாதையோ, முடிவிடமோ இல்லை என்று முடித்துக் கொண்டேன்.

அச்சமயம்தான் "பகவத் பாதை" எனும் சிற்றிதழை தாங்கள் வெளியிடுவதாக அறிந்தேன்.

ஆனால் அன்பர்களுக்கு மத்தியில் இந்த 'பாதை' எனும் சொல்லுருவகம் ஒரு சாமான்யமான, மிக வழக்கமான, ஏற்கனவே பலமுறை பலரால் கையாளப்பட்ட (Repetitive) சலிப்பூட்டும் ஒரே மாதிரியான (Monotonous) உணர்வுகளைத் தந்துவிடக்கூடாதே எனும் எண்ணம் உதித்தது.

ஏனெனில் பாதைகள் பலவற்றில் பயணித்து, அகண்டமாய்ச் சுற்றி நிற்கும் பிரமாண்ட இரும்புச் சுவர்களைக் கண்டு மலைத்து, முட்டி மோதி கை கால்கள் உதைத்து விடுதலை பெற்றுவிட மூச்சுத் திணறி பிரயத்தனம் செய்துகொண்டிருந்த காலக்கிரமத்தில் சட்டென குறிக்கிட்ட பிரவாகப் புரிதலால், முற்றுப் பெற்ற போராட்டங்களுக்குப் பின் சுற்றியுள்ள எக்குச் சுவர்கள் தானாய்ச் சரிந்து, இத்தனை கோளாறுகளுக்கும் காரணம் "பல பாதைகளை நம்முள் உருவாக்கிக் கொண்டதே" எனும் வெளிச்சத்தைப் பாய்ச்சிய ஒன்றை மீண்டும் "பாதை" என்றழைப்பதை இதயம் ஏற்றுக் கொள்ள மறுக்கிறது.

பாதை என்றவுடன் தன்னிச்சையாய் ஒரு அடைவிடத்தையும் (Destination), அதனை நோக்கிப் பயணித்திடும் கால அளவையும் (Time Bound) மனம் கற்பிதப் படுத்திக் கொள்வதை தவிர்க்கவே இயலாது.

பாதைகளை உருவாக்குவதில் பல சிக்கல்கள் உண்டு. பாதை, பயணம், பயணி என்று இதுவும் ஒருவித முப்பிடியாகும்.

இதில் பயணி என்றொரு வியக்தி ஸ்திரப்படுவான், பின் அதை "என் பாதை" என்று அழைப்பான். அதற்கான பிரத்தியேகக் குறியீடுகளை உருவாக்கிக் கொள்வான். இங்கு சுற்றி அங்கு சுற்றி வியக்தியின் இழப்பினை, பெரும்பிரவாகத்தினை புரிந்து கொள்ளாமல் வேறொரு விதமாக அதைத் தந்திரமாக உயிர்ப்பித்துக் கொள்வான்.

காலப்போக்கில் விடுதலைக்குப் பதில் எல்லாவித சடங்குகளாலும் நிரப்பப்படுவான். அதை 'என் மார்க்கம்' என்று தன் சந்ததிகளுக்கும் கடத்துவான். அக ஒளிக்காக நிறுவப்படும் பாதைகள் அனைத்தும் கால ஓட்டத்தில் பூமியைக் கிழிக்கின்றன. தற்காலத்தில் வன்முறையைத் தூவிக் கொண்டிருக்கும் மதங்களெல்லாம் ஒருகாலத்தில் சாமான்யப் பாதையாகவோ, மார்க்கமாகவோ சுருங்கி இருந்ததே என்பதை மறுக்க இயலாது.

"நான்" பிரவாகமாகிவிடுவதற்குப் பதிலாக அது சூக்குமமாக வேறொன்றைப் பிடித்துக் கொண்டு வேர்விட்டுவிடும். "நான்" எப்போதும் தன்னை இழந்து பிரவகிக்க விழைவதில்லை. எதையாவது பற்றிக் கொண்டு தேங்கிவிடுவதே அதன் மெய்யியல்பு. அது எதனால் என்பதையும் ஒருவேளை பின்னாளில் நாம் விரிவாக விவாதிப்போம்.

எனவே பெயரளவில் இது "பகவத் பாதை" என்றிருந்தாலும், இது எந்த வித பாதையையும், பயணத்தையும் குறிப்பதில்லை என்பதை பிற்காலத்தில் இதனூடே செய்யும் வேலைகளால் உணர்த்துவீர்கள் என்று நம்புகிறேன்.

இவ்வமைப்பு, எவ்வகையிலும், யாரையும் வெறுமனே சில சுய அடையாளங்களுக்காக தேங்கச் செய்து விடாமல் மிக இயல்பாகப் பிரவகிக்கச் செய்யட்டும்.

சமூக சேவைகள், நற்பணிகள் போன்ற புறக் காரியங்கள் நடந்தேறுவது நல்லதே. ஆனால் அதைவிட மேலானதும், சாரமானதுமான தன்னிழப்பினை, பிரவகிக்கும் "நான்" உணர்வின் கூர்ந்தறிதலைக் கற்றுக் கொடுப்பதும், சுட்டிக் காட்டுவதுமே பகவத் பாதையின் மேலான சேவையாக இருக்கமுடியும் என்பது என் தாழ்மையான உணர்வு.

அந்தத் தன்னிழப்பினைப் புரிந்து கொண்டவர் மிக இயல்பாகப் பிரவகிப்பார். அவர் என்ன செய்தாலும் அது சுதந்திரமான இயக்கமாகவும், நுணுக்கமாய் ஏதோ ஒரு விதத்தில் சேவையுமாகவுமே அமைந்துவிடுகிறது. சில சமயம் ஒன்றுமே செய்யாவிட்டாலும் கூட.

"பகவத் பாதையின் கட்டுரைகளில் யாரையும் சமரசம் செய்யாத ஒரு உயிர்ப்பு இருக்கட்டும். நன்மை, தீமை கடந்த, விளம்பரத் தனமற்ற, வளரவேண்டும் எனும் நோக்கமற்ற, இத்தனை பேரை இது சென்றடைந்து விடவேண்டும் எனும் கணக்குகளற்ற வெறுமனே சத்தியத்தின் வித்திடல் மாத்திரம் நடந்தேறட்டும்.

அழகுணர்ச்சியோடு (Esthetic) இதைச் செய்தல் தவிர்க்க இயலாது. எனினும் அது வெறுமனே, கலைகளின் (Artistic) எல்லைகளுக்குள் இருந்து மாத்திரம் வெளிவராமல் உண்மையின் அடிநாதத்தில் இருந்து வெளிப்படட்டும்.

கடுங்குளிர் காலத்தினூடே கனன்று கொண்டிருக்கும் நெருப்பின் கதகதப்பாய், கோடை வேனலுக்கிடையே வீசிக் கொண்டிருக்கும் குளிர் தென்றலாய் அது இருக்கட்டும்.

ஞானதாகிகளுக்காக முற்றிலும் ஒரு புதிய பரிமாணத்தில், பரிணமித்த ஐயாவின் பிரவாகம் தத்துவார்த்த எல்லைக் கோடுகளுக்குள், சுருங்கித் தேங்கிவிடாதவாறு உயிர்ப்புடன் எடுத்துச் செல்வதே பகவத் பாதையின் இயக்கமாகட்டும்.

சமூகத்தை ஒதுக்கி, இலவு காத்த பக்ஷியாய், ஏதோ ஒன்று தன்னை ஆகர்ஷித்துக் கொள்ளப்போகிறது. ஏதோ ஒன்று எனக்கு நிகழப் போகிறது, மாறப்போகிறது என்றெல்லாம் நுண்ணிய கற்பிதங்களை வளர்த்துக் காத்துக் கொண்டிருக்கும், சாது சந்நியாசிகளை, சாமான்ய இயல்பான வாழ்வை நோக்கி திருப்பிவிடும் ஐயாவின் தெளிவினை, சமரசமின்றி கொண்டு செல்லட்டும்.

துயரங்களாலும், விரக்திகளாலும் உயிர்ப்பிக்கப்பட்ட அகத்தேடல் மேலும் மேலும் நீண்டு தொடராமலும், எதிலும் தேங்கி நின்றுவிடாமலும் நித்தியப்ரவாகத்தில் தனி அடையாளமின்றி மறைவதைப் புரிந்து கொள்ள விடும் அழைப்பாக இருக்கட்டும் பகவத் பாதை.

அன்புடன்
**இரா. ஆனந்தக்குமார்,** கோவை.
சூன்யப்பிரவாகம் நூல் ஆசிரியர்
Cell : 98422-31582

# ஜென்கதை

## –குருவின் குழந்தை–

ஒரு கன்னிப்பெண் திருமணம் ஆகாமலேயே கர்ப்பமுற்றாள். அவளுடைய காதலன் யார் என்று வெளியே தெரிந்தால், அவனை அவளது பெற்றோர் கொன்றுவிடுவார்கள். என்னசெய்வது?

அந்த ஊரில் அந்த ஜென்குரு மிகவும் பிரபலமானவர். மடாலயம் கூட நடத்துகிறார். அவளும் தனது பெற்றோருடன் அங்கு அடிக்கடி போயிருக்கிறாள்.

தனது குழந்தைக்கு அந்த ஜென்குரு தான் காரணம் என்று கூறி விட்டாள்.

ஜென் குருவை மாட்டி விட வேண்டுமென்பது அவளுடைய நோக்கமல்ல. அந்த ஜென்குரு மிகவும் போற்றப்படக் கூடியவர். அரசன் கூட அவருக்கு மிக நெருக்கமாக இருந்தார். அதனால் எவரும் சுலபமாக அவருக்குக் கெடுதல் செய்துவிட முடியாது. ஆகவே அவள் தைரியமாக அவருடைய பெயரைச் சொன்னாள்.

அவள் நினைத்த படியே நடந்தது. அவளது பெற்றோரால் அவருடன் தகராறு செய்ய முடியவில்லை. ஆனால் குழந்தை பிறந்ததும், அவளது பெற்றோர் குழந்தையை எடுத்துக்கொண்டு அந்த குருவை அவமதிக்கும் வகையில் அவரிடம் சென்றனர்.

"உங்கள் குழந்தையை நீங்கள்தாம் வைத்துக்கொள்ள வேண்டும்", என்று கூறினார்கள்.

அந்த குருவும், "அப்படியா? சந்தோசம்", என்று அந்தக் குழந்தையை வாங்கிக் கொண்டார்.

அந்தக் குழந்தை அவரிடமே வளர்ந்து வந்தது.

தவறான தொடர்பின் மூலம் அவருக்கு ஒரு குழந்தை இருக்கிறது என்பது பிரபலமாகி விட்டது.

அதனால் அவரது சீடர்கள் ஒவ்வொருவராக அவரிடமிருந்து விலகிப்போக ஆரம்பித்தார்கள். அவருடைய மடாலயத்துக்கு வரும் பக்தர்கள் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைய ஆரம்பித்தார்கள்.அவரால் மடாலயத்தை நடத்த முடியவில்லை. மடாலயத்தையும் கை விட்டு விட்டு மரத்தடிக்கே அவர் வந்துவிட்டார்.

இவற்றையெல்லாம் அந்தக் குழந்தையின் தாய் பார்த்துக் கொண்டிருந்தாள். தன்னால் அந்த குருநாதருக்கு ஏற்பட்ட அவமானங்களையும் கஷ்டத்தையும் அவளால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை.

தன்னுடைய காதலன் யார் என்பதைத் தன்னுடைய தகப்பனாரிடம் கூறிவிட்டாள். அந்த தகப்பன் அவளை அவளுடைய காதலனுக்கே திருமணம் செய்து வைத்து அந்த குருவிடம் கூட்டிச் சென்றார்.

"இவன்தான் இந்தக் குழந்தையின் உண்மையான தகப்பன்" என்று கூறினார்.

அந்த குருநாதரும், "அப்படியா? சந்தோசம்" என்று கூறிவிட்டார்.

*இவ்வளவு தானா?*
*ஆமாம், இவ்வளவு தான்.*



## இலவச Download

ஸ்ரீ பகவத் ஐயாவின் தமிழ் மற்றும் ஆங்கிலப் புத்தகங்கள் அனைத்தையும் **www.pravaagam.org** என்ற இணையத் தளத்திலிருந்து இலவசமாக **Download** செய்து கொள்வதற்கு ஏற்றவகையில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. தங்கள் பெயர் மற்றும் முகவரியையும் பதிவு செய்துவிட்டு **Download** செய்து கொள்ளலாம்.

ஸ்ரீ பகவத் மிஷன் வெளியீடான "பகவத் பாதை" மாத இதழையும் www.pravaagam.org என்ற இணைய தளத்திலிருந்து இலவசமாக Download செய்து கொள்ளலாம்.

பொதிகை, சங்கரா, கலைஞர் ஆகிய தொலைக்காட்சிகளில் **அய்யா** அவர்கள் ஆற்றிய வீடியோ உரைகள் மற்றும் தமிழ், ஆங்கிலம், கேள்வி-பதில் வீடியோ உரைகளையும் http://shribagavath.blogspot.com. http://bagavathayya.blogspot.com- ஆகியவற்றில் காணலாம்.

ஐயாவின் தமிழ், ஆங்கில நூல்கள் மற்றும் மாத இதழ் அனைத்தையும் இலவசமாக நீங்களும் படித்து, உங்களுடைய உள்நாட்டு, வெளிநாட்டு நண்பர்களுக்கும் இந்த வசதியை தெரியப்படுத்தி அவர்களும் பயன்பெற உதவுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

ஸ்ரீ பகவத் மிஷன்

### குறிப்புகள்

கேள்வி பதில் பகுதிக்காக வாசகர்களிடமிருந்து கேள்விகளை வரவேற்கிறோம்.

நீங்கள் இம்மாத இதழை மாதந்தோறும் உங்களின் e-mail மூலம் பெறுவதற்கு உங்கள் e-mail ID தொலைபேசி எண், அலைபேசி எண் மற்றும் வீட்டு முகவரியையும் கீழ்க்கண்ட e-mail-ல் பதிவுசெய்வது அவசியம்

bagavathpathmonthlymagazine@gmail.com (or) jeevamani@pravaagam.org

**நமது இதழை விரும்பிப் படிக்கக்கூடிய அன்பர்களின் முகவரிகளை அனுப்பிவையுங்கள்.**

## ஸ்ரீபகவத் அவர்களின் நூல்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | நீங்களும் ஞானியாகலாம் | – ரூ. | 40 |
| 2. | கவலைகள் அனைத்திற்கும் தீர்வு | – ரூ. | 100 |
| 3. | ஞானமலர்வு | – ரூ. | 15 |
| 4. | தியானத்தை விடு ! ஞானத்தைப் பெறு ! (நர்மதா) | – ரூ. | 90 |
| 5. | சும்மா இரு | – ரூ. | 30 |
| 6. | நான் யார் ? | – ரூ. | 20 |
| 7. | சூன்யப் பிரவாஹம் (நர்மதா) | – ரூ. | 65 |
| 8. | ஞானப் பட்டறை | – ரூ. | 60 |
| 9. | ஆன்மாவைத் துறந்து ஆன்மாவாக இரு | – ரூ. | 60 |
| 10. | தேடிப்போக வீடு இல்லை | – ரூ. | 30 |
| 11. | ஸ்ரீ பகவத் பார்வையில் ஜென் கதைகள் | – ரூ. | 40 |
| 12. | சத் தரிசனம் | – ரூ. | 60 |
| 13. | ஆகாமிய கர்மா | – ரூ. | 60 |
| 14. | ஞான விடுதலை | – ரூ. | 50 |
| 15. | ஆன்ம ஞான ரகசியம் | – ரூ. | 60 |
| 16. | அனுஷ்டான ஆன்மீகம் | – ரூ. | 150 |
| 17. | தீய பழக்கங்கங்களை விடமுடியுமா? | – ரூ. | 10 |

English Books

| | | | |
|---|---|---|---|
| 1. | Don't Delay Enlightenment | – ரூ. | 100 |
| 2. | Give up Meditation ! Get Enlightenment ! | – ரூ. | 300 |
| 3. | Renounce God ! Be God ! | – ரூ. | 200 |
| 4. | Absolute Reality | – ரூ. | 150 |

**All English Books are Available in Higgin Bothams Book Stores**

Audio Books

| | | | |
|---|---|---|---|
| 1. | ஞான விடுதலை | – ரூ. | 150 |
| 2. | நீங்களும் ஞானியாகலாம் | – ரூ. | 100 |
| 3. | Don't Delay Enlightenment | – ரூ. | 150 |
| 4. | ஞான மலர்வு – ஐயா உரை | – ரூ. | 100 |
| 5. | கர்ம வினைகளுக்கு அறிவியல் ரீதியான பரிகாரங்கள் – ஐயா உரை (Video) | – ரூ. | 100 |

நூல்களைப் பெற :

## ப்ரவாகம் பப்ளிகேஷன்ஸ்

*31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-636 003. தமிழ்நாடு, இந்தியா*

தொடர்புக்கு : 97891 65555, 99942 05880.

**Book packet** containing printed books

*To*




*If undelivered please return to:*

**SRI BAGAVATH MISSION**
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
**Mobile : 94432 90559, 99942 05880**
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : jeevamani@pravaagam.org

Published by Shri.V.A.P.Sharavananon behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem - 636 003. Tamilnadu,INDIA.
Printed by Sri Jayavel Press, Gandhi Maidanam, Ammapet, Salem - 636 003. Editor : Shri. A.Senthilnadhan, cell : 99421 81933.